# கொஞ்சமே பிஜ், கொஞ்சுமே பளபளப்பு
# மிஞ்சுமே பிஜ், மிச்சமே பணம்.




ஸூப்பர் பிஜ்—
பாத்திரங்களுக்கு அளிக்
கிறது பளபளப்பு...ஒளி
விடும் நட்சத்திரம் போல!
பாத்திரங்களுக்கு மட்டு
மல்ல...தரை, வாஷ்-
பேஸின், டைல்ஸ், கதவு
மற்றும் ஜன்னல்களின்
கண்ணாடிகள் இவை
அனைத்திற்கும் பளபளப்பு
அளிக்கிறது. பிஜ்—சிறிது
உபயோகித்தாலே சிறப்-
பான பளபளப்பு. விலையும்
குறைவு—சிக்கனமோ
சிக்கனம்.

**கோத்ரெஜ்**
அளிக்கும்
**ஸூப்பர்**

## பிஜ்

துலக்கும் பவுடர்

**வேலை...விலையை விட அதிகம்**




CLARION/B/GS/49/224 TAM

**ஓராண்டுக்குப் பின்னால், இராதாபுரம் எப்படியிருக்கிறது.... 'கல்கி'யில் சுட்டிக்காட்டப்பட்ட பிரச்னைகள், குறைபாடுகள் களையப்பட்டிருக்கின்றனவா என்று அறிய இராதாபுரத்திற்கு ஒரு 'ரீ—விசிட்' செய்தோம். (பார்க்க: கல்கி 6.4.86 இதழ்.)**



• எட்டாண்டுகளாகத் திறக்கப்படாத பிரசவ வார்டு

கடந்தாண்டு இராதாபுரத்திற்குச் சென்றபோது, அங்குள்ள மெயின் ரோட்டிலேயே பேருந்துகள் நிறுத்தப்பட்டிருந்தன. இராதாபுரத்திற்கு ஒரு பஸ் நிலையம் தேவை என்பதை வலியுறுத்தியிருந்தோம். இவ்வாண்டு அங்கு செல்லும்போது, புதிதாகக் கட்டியிருக்கும் பஸ் நிலையத்தில்தான் பேருந்து போய் நிற்கும் என்று அதிக ஆசையோடு சென்ற எங்களுக்கு நிராசையாகிவிட்டது. வழக்கம் போல, சாலை ஓரத்திலேயே எங்களை இறக்கி விட்டுவிட்டார்கள்! அப்படியானால், இன்னும் இராதாபுரத்தில் புதிய பஸ் நிலையம் அமைக்கப்படவில்லையா?

# விமோசனமே கிடையாதா; முன்னேறவே முடியாதா?



• புதிதாகக் கட்டப்பட்டுள்ள மேல்நிலைத் தண்ணீர்த் தொட்டி

சாலை ஓரத்திலுள்ள ஒரு வெற்றிலை பாக்குக் கடைக்காரரிடம் இது பற்றிக் கேட்டதற்கு —

"அந்த வயிற்றெரிச்சலை ஏன் ஸார் கிளப்புறீங்க....? இந்த ஊரு விளங்குவது இங்குள்ளவங்களுக்கே புடிக்காது....! போன வருஷம் நீங்க 'கல்கி'யில பஸ் நிலையத்தின் அவசியம் பற்றி எழுதின பொறவு நடந்த கவுன்சிலர் கூட்டத்தில், பஸ் நிலையம் கட்டுவதற்கான தீர்மானம் நிறைவேற்றினாங்க....! ஆனா.... அதை எங்கே அமைக்கிறது என்பதிலதான் இப்பப் பிரச்னை கிளம்பியிருக்கு. இங்குள்ள ஊராட்சி மன்றத் தலைவர், டி.எம். பண்டாரசிவன் பிள்ளை, கோயில் நிலத்தை விலைக்கு வாங்கி.... பஸ் நிலையம் அமைக்கணும்னு சொல்றாரு! உறுப்பினர்கள் 1965—லேயே பஸ் நிலையத்திற்கென அடிக்கல் நாட்டப்பட்டுள்ள மார்க்கெட் நிலத்திலதான் பஸ் நிலையத்தைக் கொண்டு வரணும்னு சொல்



• குடி தண்ணீர்ப் பிரச்னை தீர்ந்தபாடில்லை

ளுங்க! இப்படி ரெண்டு கோஷ்டியாகச் செயல்படுவதால்.... இங்கே இதுவரை பஸ் நிலையமே கட்டப்படவில்லை!" என்றார்.

அன்று போலவே இன்றும் இராதாபுரம் நித்தியக் கல்யாணிக் கோவிலுக்குச் சொந்தமான இரண்டு தேர்களில் ஒரு தேர், சரிவரக் கவனிக்கப்படாமல்.... சாலை ஓரத்திலேயே நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது! சரி, மற்றுள்ள பிரச்னைகளாவது தீர்க்கப்பட்டிருக்கின்றனவா என்பதை அறிய, ஊருக்குள் நுழைந்தோம்.

'போதிய அளவு அழுத்தம் இல்லாததால், தண்ணீர்க் குழாயின் மேல் மட்டத்திற்குத் தண்ணீர் வராததால்..... குழாயின் பின்புறம் பள்ளம் தோண்டி, அதில், மக்கள் தண்ணீர் பிடிக்கிறார்கள். இது சுகாதாரக் கேடு!' என்று கடந்த ஆண்டே இராதாபுரம் பற்றிய கட்டுரையில் குறிப்பிட்டிருந்தோம். இப்போதும் அந்நிலைதான் அங்குள்ளது! மேலும் அப்படிக் குடிநீர் எடுக்கும் பள்ளத்தில் தற்போது மழை நீர் வேறு தேங்கி, குட்டையாகக் காட்சியளித்தது! சுகாதாரக் கேட்டிற்கு இதைவிட வேறு சான்று வேண்டுமா....?



* சீரமைக்கப்பட்ட அரிஜன மாணவர் விடுதி

அந்த நேரத்தில் எங்கள் எதிரில் வந்த இளைஞர், கே. கணேசனிடம், "இப்படிப் பள்ளம் தோண்டித் தண்ணீர் பிடிக்கும் நிலை உங்கள் ஊரில் இன்னும் மாறாமல் இருப்பதன் மர்மம் என்ன....?" என்று கேட்டபோது —

"தண்ணீரின் அழுத்தம் போதாததால் தரை மட்டத்திற்கு மேலே குழாயில் தண்ணீர் வருவதில்லை! அதனால், இப்படிப் பள்ளம் தோண்டி தண்ணீர் பிடித்து வந்தோம். தண்ணீர்ப் பிரச்னை பற்றி நீங்கள் கடந்த ஆண்டு 'கல்கி'யில் எழுதிய பிறகு, இங்கு சுமார் பதினைந்து லட்ச ரூபாயில் ஒரு மேல்நிலைத் தண்ணீர்த் தொட்டியை அமைத்தார்கள். அதில் தண்ணீரைத் தேக்கி வைத்து, அங்கிருந்து இராதாபுரத்திற்குத் தண்ணீர் சப்ளை செய்யலாம் என்பது ஆட்சியாளர்களின் கணிப்பு. அப்படி, கட்டி முடிக்கப்பட்டுள்ள மேல்நிலைத் தண்ணீர்த் தொட்டியில், நீர் ஏற்றம் செய்யப்படும்போது, அழுத்தம் குறைவான 'பிவிசி' பைப் போடப்பட்டிருப்பதால் சிறிது நேரத்தில் அது உடைந்து விடுகின்றது! இப்படிப் பல தடவை 'பைப்' உடைந்துவிட்டது. யார் யாரெல்லாமோ வந்து பார்த்தார்கள். ஆனால், இன்னும் அழுத்தம் தாங்கக் கூடிய பைப்பை உபயோகிக்காததால்.... மேல்நிலைத் தண்ணீர்த் தொட்டியில் நீரேற்றம் செய்ய முடியவில்லை! பல லட்சம் செலவு செய்து கட்டப்பட்டுள்ள மேல்நிலைத் தண்ணீர்த் தொட்டியும் பயனற்றுக் கிடக்கின்றது! மக்கள் வரிப் பணம்



* இன்னும் பள்ளம் தோண்டித்தான் தண்ணீர் பிடிக்கிறார்கள்.



* கே. கணேசன்

எப்படியெல்லாம் வீண் விரயம் செய்யப்படுகின்றது... பார்த்தீர்களா....?

"இன்னும், கடந்தாண்டு 'கல்கி' கட்டுரையில் மருத்துவமனையின் இடது பக்கம், ஒரு பிரசவ வார்டு கட்டி முடிக்கப்பட்டு.... ஏழாண்டுகளுக்கு மேலாகியும் இன்னும் பிரசவமாகாமல் கர்ப்பிணியாகவே காட்சி

தருகின்றது!' என்று குறிப்பிட்டிருந்தீர்கள். அதில்ஏழாண்டை,எட்டாண்டாக்கிக்கொள்ளுங்கள்! ஆமாம்.... நீங்கள் 'கல்கி'யில் படம் பிடித்துக் காட்டியபோதிலும் அந்தப் பிரசவ வார்டு இன்னும் திறக்கப்படவேயில்லை! அதன் அருகிலுள்ள மருத்துவமனையில் கூட ஒரு நிரந்தர மருத்துவரை இன்னும் நியமிக்கவில்லை! ஒரு மருத்துவர், வெளியூரிலிருந்து வாரத்திற்கு ரெண்டு நாள் மட்டும் இங்கு வந்து போகிறார். இத்தனைக்கும் சுமார் 25 கி.மீ. சுற்றளவில் உள்ள ஒரே அரசு ஆஸ்பத்திரி இதுதான்! இப்போதும், இங்கு வரக் கூடிய போலீஸ் கேஸ்கள் எல்லாம் நாங்குநேரிக்கோ நாகர்கோவிலுக்கோதான் செல்ல வேண்டும்!

"பெயரளவில் மட்டுமே இது ஒரு தாலுகா தலைமையிடம், இங்கு இயங்க வேண்டிய அனேக அலுவலகங்கள் இன்னமும் இங்கு வந்தபாடில்லை. ஆனால், இங்கு ஏற்கெனவே, இயங்கி வந்த அலுவலகங்களையும் வேறு இடங்களுக்கு மாற்றி வருகிறார்கள். உதாரணமாக, பல ஆண்டுகளாக இவ்வூரில் இயங்கி வந்த வனச் சரக அலுவலகத்தை வள்ளியூருக்கு மாற்றிவிட்டார்கள். 'ஏன் மாற்றினீர்கள்?' என்று கேட்டால், 'இராதாபுரத்தில் தண்ணீர்த் தட்டுப்பாடு!' என்கிறார்கள். தங்குவதற்குப் போதிய வசதிகள் இல்லாததால்.... அதிகாரிகளும் அலுவலர்களும் இராதாபுரம் என்றாலே..,. 'வேண்டவே வேண்டாம்....!' என்று மறுக்கிறார்கள். இன்னும் வேடிக்கை என்னவென்றால், சார்நிலைக் கருவூலம் இங்குள்ளது. ஆனால், பாரத ஸ்டேட் வங்கியின் கிளை ஒன்று இங்கு அமைக்கப்படவில்லை! ஒரு தாலுகா தலைமையிடத்தில் அமைக்கப்படும் விளையாட்டரங்கமோ, நியமனைப்பு நிலையமோ இன்னும் இங்கு அமைக்கப்படவில்லை!

"ஒரு காலத்தில், இவ்வூருக்கு இராஜராஜபுரம் என்ற பெயர் வழங்கப்பட்டது. இப்போது,இவ்வூரை 'ஆண்டிபுரம்' என்றால் மிகப் பொருத்தமாக இருக்கும்!" என்று சொல்லி முடித்தார், கே. கணேசன். அபிவிருத்தி அடையாமல் அப்படியே இருக்கின்றதே என்ற ஏக்கம் அவர் குரலில் காணப்பட்டது.

**அ**ங்குள்ள 'அரசு மாணவர் விடுதிக்குச் சென்று பார்த்தோம். அவ்விடுதி, மிக நல்ல முறையில் சீரமைக்கப்பட்டுள்ளது கண்டு ஆச்சரியமடைந்தோம். மேற்கூரை சரிசெய்யப்பட்டு, புதிய ஓடுகள் போடப்பட்டுள்ளன. ஜன்னல்களுக்குக் கதவுகள் அமைத்து, வெள்ளை அடித்து, உட்புறம் தரையில் சிமெண்ட் போடப்பட்டுள்ளதோடு, குழல் விளக்குகளையும் பொருத்தியிருக்கிறார்கள். மாணவர்களின் உடமைகளை வைப்பதற்கு அலமாரிகளும் உள்ளன. அரிசன மாணவர் விடுதியை நல்ல முறையில் உடனடியாகப் பராமரிப்புச் செய்தமைக்குச் சம்பந்தப்பட்டவர்களுக்கு, எங்களுடைய பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். விடுமுறை காலமாதலால், மாணவர்களைச் சந்திக்க முடியவில்லை!

பெண்கள் கழிப்பிடத்திற்கு அருகில் உள்ள கட்டடத்தில் நடந்து வந்த கள்ளுக் கடை குறித்து நாம் சுட்டிக்காட்டியதும் உடனடியாக மாற்றியிருக்கிறார்கள். பிறகு, கள் சாராயக் கடைகளை மூடவே சட்டம் இயற்றப்பட்டுவிட்டது. தற்போது பட்டார்குளத்தின் பக்கத்தில் 'கள்ளச் சாராய' வியாபாரம் மிக மும்முரமாக நடந்து வருகிறது என்று பொதுமக்கள் புகார் சொல்கின்றனர்......!

கட்டுரை, படங்கள்: **பானு மணாளன்**

## அடுத்த இதழ்...

# காஞ்சி பரமாச்சார்யாளின் ஜெயந்தியை யொட்டி அற்புதமான நான்கு முழுப் பக்க வண்ணப் படங்கள்:

* ஆதிசங்கரர் * சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள்

* ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் * சங்கரானந்தேந்திர சுவாமிகள்

## அட்டைப் படக் கட்டுரை:

## விசு: விவேகமா? விகடமா?



# ஜ்...! சத்தம் போட்டுச் சொல்லிவிடாதீர்கள்!

* தமிழக அரசு நிறுவனங்கள் நஷ்டத்தில் இமாலய சாதனைகளா? சத்தம் போட்டுச் சொல்லாதீர்கள். அடுத்த தேர்தலுக்கு இந்த விஷயங்களையும் சாதனைப் பட்டியலில் சேர்த்துவிடப் போகிறார்கள்!

திருத்துறைப்பூண்டி, டி. டேவிட் ஜான் பிரிட்டோ.

* 24.5.87 கல்கியில் வெளியாகியிருந்த மூன்று கார்ட்டூன்களுள் படு அமர்க்களமாக இருந்தது — அரசியல் சினிமா தடை சட்டம் பற்றிய மூன்றாவது கார்ட்டூன்தான்!

பெங்களூர்—53, தாரகை.

* இருபதாம் நூற்றாண்டு முடியப் போகிற நேரத்திலும் 'வங்காரம்' போல் ஒரு கிராமம் இருக்கிறதா?! கட்டுரையைப் படித்துவிட்டு ஆச்சரியப்பட்டுப் போனேன். இந்த அழகில் எம்.எல்.ஏ. மந்திரிகளைக் கிண்டல் செய்யக்கூடாதாம். விமர்சிக்கக் கூடாதாம்...! நெஞ்சு பொறுக்குதில்லையே....!

மயிலாடுதுறை, கி. எழில்.

* 24.5.87 இதழ் அட்டைப் படம் என்னை மிகவும் கவர்ந்தது. புகைப்படக்காரருக்குப் பாராட்டுக்கள்.

சென்னை—21, கே. முகமது தஸ்தகீர் பாஷா.

* பஞ்சாப் பிரச்னையில், ஜனாதிபதி ஆட்சியினால் ஏற்படக் கூடிய பின்விளைவுகளைப் பற்றிய தலையங்கம் அருமை. ராஜீவ் ராஜதந்திரத்தை மட்டும் இழந்துவிடவில்லை. தம் செல்வாக்கையும் சொல்வாக்கையும் கூட இழந்து கொண்டிருக்கிறார் என்பதையே அவர் செயல்கள் நிரூபிக்கின்றன.

விருத்தாசலம், கி. நாகராஜன்.

* திரு சிந்தனைப் பற்றி உமாநாத் குறிப்பிட்ட குணநலன்களுள் 'சட்டமன்ற உறுப்பினர் என்கிற முறையில் அவர் எந்த ஒரு விஷயம் பற்றிப் பேசினாலும் மிகவும் தெளிவாக அழுத்தம் திருத்தமாகப் பேசுவார்' என்பதும், 'அ.தி.மு.க., தி.மு.க. இரண்டு கட்சிகளும் மக்களின் பிரச்னைகளை விட்டுவிட்டு, வீணான, அர்த்தமற்ற சர்ச்சைகளில் ஈடுபடும்போதெல்லாம், சலிப்புடன் வருத்தப்படுவார்' என்பதும் பலரது சிந்தனையைத் தூண்டும் வகையில் அமைந்ததோடல்லாமல், இன்றைய அரசியல்வாதிகளுக்குப் பயனளிக்கும் ஒரு படிப்பினையாகத் திகழும் வகையிலும் அமைந்திருந்தது.

சென்னை—35, பி.கே. சங்கர்.

* தமிழக அரசு அடைந்துள்ள ஒவ்வொரு நஷ்டத்தையும் பற்றிப் படிக்கும்போது, என் கண்களிலிருந்து வந்தது இரத்தத் துளிகள்தான்! கட்டுரையின் கடைசிப் பத்தி உரைக்க வேண்டியவர்களுக்கு உறைத்தால் சரிதான்!

'பனிச்சிறும் தொழில்: ஒளி மங்கிய வாழ்க்கை!' ஆஹா! எவ்வளவு பொருத்தமான தலைப்பு!

குத்தாலம், எஸ். ராஜா.

* மதுமிதா எழுதிய 'மீது ஏமி இந்தக் கோபம்' — சிறுகதை அட்டகாசம். தமிழ்மொழி தெரியாமல் மனைவி சிரமப்படுவதையும் மனைவியைத் தமிழ் கற்றுக் கொள்ள வைக்க கணவன் கஷ்டப்படுத்துவதையும் மிக இயல்பான நகைச்சுவை பாணியில் எழுதி வாசகர்களை விலா நோகச் சிரிக்க வைத்ததற்குப் பாராட்டுக்கள்.

மதுரை—1, எஸ். மூர்த்தி.

* வரதட்சிணையை எதிர்த்து ஒரு போராட்டம், படக்கதை ஒரு சிறு ஓரங்க நாடகம் பார்த்ததுபோல் சிறப்பாக இருந்தது!

சாத்தூர், எம். செல்லையா.

* கரூர் டவுனுக்குள் வசிப்பவர்களுக்கு டவுன் பஸ் வசதி இல்லையே என்று குறைப்பட்டுக் கொண்டவர் கரூரிலுள்ள குழந்தைகள் மருத்துவரான டாக்டர் சி. ராமச்சந்திரன் ஆவார்! நீங்கள் குறிப்பிட்டுள்ளது போல டாக்டர் ராதாகிருஷ்ணன் அல்ல!

கரூர், பி. பாலசுப்ரமணியன்.

* கண்ணில் ஒத்திக் கொள்ளும்படியாகவும், பிரேம் போட்டு வீட்டில் மாட்டி வைக்கும் அளவுக்கு, அழகாக, கிராமப்புறத்தையும் அதன் யதார்த்தத்தையும் படமாக்கி அட்டையில் போடுவது கல்கி மட்டுமே.

இராமேஸ்வரம், அ. அருள்.

* 'அனாதைகளாய்த் தவிக்கும் பத்தாயிரம் மக்கள்' — அட்டைப் பட விளக்கமும், விளக்கப் படங்களும், வங்காரம் கிராமத்திற்கே எங்களையும் அழைத்துச் சென்ற மாதிரி இருந்தது. அங்கு ஒரு நாள் சென்று வந்த நீங்கள், நடந்து செல்வதற்குப் பட்டச் சிரமத்தை, இந்தக் கிராமத்து மக்கள் தினந்தினம் பட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்று நினைத்துப் பார்க்கவே முடியவில்லை.

திருவாரூர், எஸ். ராமகோபாலன்.

* தமிழ்நாடு வாக்காளர் பட்டியலையே இளிச்சவாயர் சங்கப் பட்டியலாக வர்ணிக்கும் துணிவு தாராசைத் தவிர, வேறு யாருக்கும் வராது. எண்ணிப் பார்க்கும்பொழுது அந்தத் துணிவான கிண்டலுக்குப் பின்னுள்ள உண்மை, நெஞ்சை உறுத்தத்தான் செய்கிறது.

திருக்குவளை, வெற்றிப் பேரொளி.

* மாவட்டம் தோறும் மகத்தான பணிபுரியும் கல்கிக்கு எனது பாராட்டுக்கள். மாவட்டங்களில் உள்ள குறைகள் அனைத்தும் நம் முதல்வர் கவனத்துக்கு வர வேண்டும் என்ற நோக்கில், பதிவுத் தபாலில் ஒரு வருட காலத்துக்கு நமது முதல்வருக்குக் கல்கி அனுப்பி வைக்க வேண்டுமாய்க் கோருகிறேன். அதற்கு எவ்வளவு ரூபாய் நான் அனுப்ப வேண்டும் என்பதைத் தயவு செய்து தெரிவிக்கவும்.

அல்கோபர், சவூதி அரேபியா. எடுத்துக்கட்டி கே. மணி

(தங்களுடைய உயர்ந்த நோக்கத்துக்கு நன்றி. ஆனால் தாங்கள் முதல்வர் சார்பில் சந்தா அனுப்பத் தேவையில்லை. காரணம், வாரா வாரம், இரு கல்கி பிரதிகள் முதல்வரின் வீட்டு விலாசத்துக்கும் அலுவலக விலாசத்துக்கும் அனுப்பப்பட்டு வருகின்றன. — ஆர்.)

* கணவன் — மனைவி இரண்டு பேரும் ஒத்துப் போனா பொதுவான ஒரே ஒரு விஷயம், அவர்களின் கல்யாணப் பத்திரிகை.



மின்னும் மேனி
மெருகுக்கு ரெக்ஸோனா









மின்னி மிளிரும் மேனி...எந்நாளும் உங்கள் பொன்னான கனவு...நிறைவேற வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹுபுஷா (தேவதாரம்) ஆகிய நாலு வகை இயற்கைத் தைலங்களின் நற்கலவையான ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு இயல்பான வழியாகும்.

ரெக்ஸோனா

உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைக்கிறது.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 90 2416 TM

# அழகுச் சாதனங்கள் தயாரிப்பில் அழிக்கப்படும் உயிரினங்கள்

* பாம்புத் தோல் உரிக்கப்படுகிறது



நியட் சினில் கதாநாயகி ஸ்லோ மோஷனில் ஓட, அவரது விரிந்த கூந்தல் தோகை போல் பறக்க, ஒரு கணம் அக்காட்சி freeze செய்யப்படுகிறது.

ஆஹா! என்ன அழகு! புஸு புஸுவென்று பொங்கி அலை அலையாய்ச் சரியும் கூந்தல், கண்களின் காந்தத்தை அதிகரிக்கச் செய்யும் ஒப்பனை, முகத்தை ஒளிரச் செய்யும் பூச்சு, கடைசியாக அந்த லிப்ஸ்டிக் உதடுகள் — எவ்வளவு எடுப்பாக உள்ளன! என்று பார்ப்பவர் எல்லோரும் வியந்து போகிருர்கள்.

அந்த நடிகையுடைய அழகின் ரகசியத்தை விளம்பரங்கள் பறைசாற்றுகின்றன. முன்னணி நடிகை .... விரும்பி உபயோகிக்கும் ஷாம்பூ, சோப்பு, பவுடர், சென்டு என்று வரிசையாக ஒவ்வொரு அழகு சாதனத்துக்கும் பத்திரிகைகளிலும் டீ.வி., ரேடியோவிலும் விளம்பரங்கள்.

ஆனல் இச்சாதனங்களின் தயாரிப்பில், பின்னணியில் உள்ள சோகக் கதைகளை அறிந்தால் மனசாட்சி உள்ள எவருமே அவற்றை வாங்கவும் உபயோகிக்கவும் நிச்சயம் தயங்கத்தான் செய்வார்கள்.



உதாரணமாக, பெண்கள் மட்டுமின்றி ஆண்களும் பயன்படுத்தும் ஷாம்பூ மனிதர்கள் உபயோகிக்க உகந்ததுதானு என்று பரிசோதிக்கச் சில சொட்டுக்களை, ஒரு முயலின் கண்ணில் விட்டுப் பார்க்கிருர்கள். கட்டப்பட்டிருக்கும் முயல் எரிச்சல் தாளாமல் துடிக்கும்போது சிலசமயம் அதன் முதுகெலும்பு முறிவதுண்டு. படிப்படியான பரிசோதனைகள் ஒரு முயலின் கண்களைக் குருடாக்கும். முயலுக்குக் கண்ணீர் சுரப்பிகள் இல்லாததால் இயற்கையாகக் கண்ணீரால் கழுவப்பட்டு எரிச்சல் நீங்க வழி கிடையாது. இதுவே பரிசோதனைக்குச் சாதகமாகவும் அமைகிறது!

ஆஃப்டர் ஷேவ் லோஷன் தயாரிப்பிலும்



இதேபோல் முயல்கள் பயன்படுத்தப்படுகின் றன. அதன் உடலின் ஒரு பகுதியில் தோல் உரிக்கப்பட்டு, அதன் மீது லோஷன் ஊற் றப்படுகிறது. காயம் ஆற, ஆற, மீண்டும் மீண்டும் பரிசோதனை தொடர்கிறது.

லிப்ஸ்டிக் உபயோகிக்கும்போது எத்தனை பெண்கள் திமிங்கிலங்களைப் பற்றி நினைத் துப் பார்ப்பார்கள்? சம்பந்தா சம்பந்தமில் லாத விஷயங்களாக இவ்விரண்டும் தோன்றுகின்றன. ஆனால் லிப்ஸ்டிக் தயாரிக் கத் தேவைப்படும் Ambergris என்ற பொருள் திமிங்கிலத்தின் குடலிலிருந்து தான் எடுக்கப்படுகிறது. இதற்காக உலகின் மிகப் பழைய விலங்குகளுள் ஒன்றான, திமிங் கிலம் தொடர்ந்து வேட்டையாடப்பட்டு அழிவையே நெருங்கிவிட்டதால் "பாதுகாக் கப்பட்ட உயிரினம்" வரிசையில் இடம் பெற் றுள்ளது.

திமிங்கிலத்தைக் கொல்வது சுலபமில்லை. ஒன்பது கூரிய அம்புகளைத் துப்பாக்கி மூலம் இதன் உடலினுள் செலுத்தினால், ஒன்பது மணி நேரங்களுக்கு ரத் தம் வெளியேறி மெள்ள உயிரிழக் கிறது. வலியும் வேதனையும் தாளாமல் இது சோககீதம் பாடும் போதுசுற்றியுள்ள அதன் சகோதர சகோதரிகள் அதனை எதிரொ லிக்கும்!



கஸ்தூரி மான்களிட மிருந்து கிடைக்கும்வாசனைப் பொருளுக்காக அவைகளைப் பொறி வைத்துப் பிடிக்கிறார் கள். பொறியில் கால் சிக்கி அவதிப்படும் கஸ்தூரி மான் சில சமயங்களில் வலி தாளா மல் தன் காலையே கடித்துப் போட்டுவிட்டு நொண்டியாக வெளியேற முயற்சி செய் கிறது. பல சமயங்களில் பயத்திலும், வலி யிலும் பட்டினியிலும் அவதிப்பட்டு மூன்று நாட்கள்வரை துடியாய்த் துடித்து இறக்கிறது.

ஒரு கிராம் கஸ்தூரி ஒரு கிராம் தங்கத்துக்குச் சமமாக மதிக்கப்படுகிறது என்பதால் இந்த மான்களும் அழிவை நெருங்கிக் கொண்டிருக்கின்றன.



• காராகுல் ஆடுகள்



• வெள்ளை மாதங்களாட்டிலிடம் தான் பாதி....

புனுகுப் பூனை கோபமாக இருக்கும்போது அதிகமாகப் புனுகு சுரக்கிறது என்பதால் அதனை முதலில் சாட்டையால் அடிக்கிறார்கள். சீறுகிற பூனையை அழுத்திப் பிடித்து ஒரு கத்தியால் புனுகு சுரண்டியெடுக்கப்படுகிறது. பத்து நாட் களுக்கு ஒருமுறை இந்த அறுவைச் சிகிச்சை நடக்கிறது. ஏனைய நாட்களில் புனுகுப் பூனை 25 × 30 செண்டி மீட்டர் அளவே ஆன ஒரு கூண்டில் அடைக்கப்பட்டு வாழ்கிறது. இதனால் இந்தப் பிராணியின் இயற்கையான வாழ்நாள் பாதியாகக் குறைகிறது.

லிப்ஸ்டிக், பவுடர், ஹேர் டை போன்றவற்றைக் குரங்கு களின் தொண்டைக்குள் குழாய் மூலம் செலுத்திச் சாப்பிட வைக்கிறார்கள் — அவற்றை மனிதர்கள் ஆபத்தின்றி உப



• காராகுல் ஆட்டுக் குட்டி தொப்பியாக உருமாறுகிறது

யோசிக்கலாமா என்று பார்க்கத் தான்! இப்படிப் பட்ட "உணவு களை" உட்கொள்ளும் குரங்குகளுள் நூற்றுக்கு ஐம்பது இறந்து போகின்றன.

தேவாங்கு என்றொரு விலங்கு. இதன் மெலிந்த உடலும், அகன்ற பெரிய கண்களும் பார்க்கவே பரிதாபமாக இருக்கும். மனிதனின் குரூரமான வேட்டைக்கு இரையாகித் தேவாங்கு கிட்டத்தட்ட அழிந்தே போய்விட்டது. தேவாங்கை அடித்துக் கொன்று, அதன் கண்களையும் இதயத்தையும் பயன்படுத்தி மாய மருந்துகளையும் வசிய மருந்துகளையும் தயாரிக்கிறார்கள். விஞ்ஞானப் பூர்வமான ஆராய்ச்சியில் நிகழும் கொடுமைகள் ஒரு புறம் இருக்க, இப்படி மூட நம்பிக்கை காரணமாக இழைக்கப்படும் கொடுமைகள் வேறு!

யானை தந்தத்தைக் கொண்டு செய்த கலைப் பொருட்களையும் நகைகளையும் ரசித்துப் பாராட்டுகிறோம். ஆனால் அந்தக் 'கலை நயத்துக்கு'க் காவு கொடுக்கப்படும் யானைகளின் பரிதாப நிலையை எத்தனை பேர் யோசித்துப் பார்க்கிறோம் — யானையைக் கொல்வதற்கு அதன் மீது விஷ அம்பு செலுத்தப்படுகிறது. விஷம் அதன் உடல் முழுதும் பரவப் பரவ அந்தப்பிரும்மாண்டமான பிராணி கம்பீரம் இழந்து, தள்ளாடித் தள்ளாடி விழுந்து மடிகிறது. சில சமயங்களில் ஆண் யானைகளுக்கென்று வைக்கப்படும் விஷம் கலந்த பலாப்பழங்களைப் பெண் யானைகள் உட்கொண்டு பலியாகின்றன. அவற்றின் கன்றுகள் ஏங்கிப் போய்ச் சீக்கிரமே உயிரிழந்து விடுகின்றன. உலகெங்கும் யானை வேட்டை தடை செய்யப்பட்டிருந்தாலும் சட்ட விரோதமாக யானைகள் வேட்டையாடப்படுவதும் அவற்றின் எண்ணிக்கை அருகி வருவதும் இன்று நடைமுறை.

பாம்புத் தோல் பர்சுகளும் பெல்டுகளும் சட்ட விரோதமாக நடைபாதைகளில்கூட விற்கப்படுவதைப் பார்க்கிறோம். பாம்பு உயிருடன் இருக்கும்போதே அதன் தலையை ஒரு மரத்தில் ஆணியால் அறைந்து விடுகிறார்கள். வாலைக் காலால் அழுந்தப் பற்றிக் கொண்டு அடி முதல் நுனி வரை தோலை உரித்து எடுக்கிறார்கள். தோலுரிக்கப்பட்ட பாம்பு துடிதுடித்துச் சாகிறது.

முதலைத் தோலும் நாய்த் தோலும் இதே போன்ற கொடூரமான முறைகளில் உரித்தெடுக்கப்பட்டு டம்பப் பைகளாகவும் இதர அலங்காரச் சாதனங்களாகவும் உரு மாறுகின்றன.

இவ்வளவு ஏன், நம் நாட்டில் நடுத்தர வர்க்கத்தினர்கூட மிகச் சகஜமாகப் பயன்படுத்தும் பட்டும் முத்தும் பவளமும் உயிரினங்களை வருத்தியும் அழித்தும் பெறப்படுபவைதான். ஆனால் மனித நாகரிகம் எவ்வளவுதான் முன்னேறினாலும் பிற உயிர்களை வருத்தியும் துன்புறுத்தியும் பெறும் பயன்களைத் துய்த்துக் கொண்டுதானே இருக்கிறது!

இவ்வாறு, பல விதங்களில் தன்னை அழகுபடுத்திக் கொள்வதற்காக மனிதன் பிற உயிர்களை அழிப்பதையும் கொடுமைப் படுத்துவதையும் எதிர்த்துப் போராடுவதற்காக ஆரம்பிக்கப்பட்டதே Beauty without Cruelty என்ற அமைப்பு. இந்த அமைப்பு, போராடுவதோடு நிறுத்திக் கொள்ளாமல், மிருகங்களை வருத்திப் பெறப்படும் சாதனங்களுக்குப் பதிலாகச் சுலபமாகக் கிடைக்கும் வேறு செயற்கைச் சாதனங்களின் உபயோகத்தைக் கற்றுத் தருகிறது. அவற்றைப் பிரபலமாக்குகிறது; அவ்வாறு தயாரிக்கப்படும் அழகு சாதனங்களின் பட்டியல் ஒன்றைத் தயாரித்தும் வெளியிட்டுள்ளது.

காராகுல் ஆடுகள் கொலையுறுவதைத் தடுக்க இந்த நிறுவனம் எடுத்துக் கொண்ட முயற்சியைப் பாருங்கள்:

'காராகுல்' என்றால் ஆஃப்கானிஸ்தான் மொழியில் கறுப்பு ரோஜா என்று பொருள். காராகுல் என்றொரு வகை ஆடு அந்நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்டு ஹிமாசலப் பிரதேசத்தில் குலுவிலும், பிகானிரிலும் பண்ணைகளில் வளர்க்கப்பட்டு வருகிறது. இதன் அடர்ந்த சுருள் சுருளான ரோமத்துடன் கூடிய தோலுக்கு ரஷ்யாவில் நல்ல வரவேற்பு இருக்கிறது. காராகுல் ஆட்டுத் தோலில் செய்யப்படும் தொப்பிகளும் கோட்டுகளும் நவ நாகரிகச் சின்னங்களாகக் கருதப்படுகின்றன. எனவே, ஏற்றுமதி சாத்தியக்கூறுகள் கருதி Indian Council for

* புகைப்படம்: கே.வி. ஆனந்த்

**Agricultural Research** இப்பண்ணைகளை அமைத்து, ஆராய்ச்சிகளை மேற்கொண்டுள்ளது. ஆனால் காராகுல் ஆட்டுக் குட்டியின் ரோமம் அது பிறந்த நாற்பத்தெட்டாவது மணி நேரத்திலேயே சுருள் தன்மையை இழக்க ஆரம்பித்துவிடுகிறது. அதனால் ஆட்டுக் குட்டிகள் பிறந்ததுமே கொல்லப்படுகின்றன. அவற்றைக் கொல்வதற்காகக் கட்டைகளைக் கொண்டு தலையில் அடிக்கிறார்கள். ஆனால் சில சமயம் ஆட்டுக் குட்டி, பிரக்ஞை இழக்கிறதே தவிர இறந்து விடுவதில்லை. இந்த நிலையிலேயே அதன் உடலிலிருந்து தோல் உரித்து எடுக்கப்படுகிறது! — அதுவும் தாய் ஆட்டின் முன்னிலையிலேயே இந்தக் கொடுமை நடக்கிறது. வேறு பல சமயங்களில் கர்ப்பமாய் இருக்கும் பெண் ஆட்டை இரும்புக் கம்பிகளால் அடித்து அபார்ஷன் விளைவிக்கிறார்கள் — குட்டியின் ரோமத்துடன் கூடிய தோலுக்காகத்தான்.

* அவருக்கு ஆபீசில் அதிசய உழைப்பாளி என்று பெயர். தப்பித் தவறிச் சிலசமயம் வேலை செய்து எல்லாரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தி விடுவார்.

ஒருபுறம் காந்தி ஜயந்தியை விமரிசையாகக் கொண்டாடி, தள்ளுபடி விலையில் கதர் விற்கும் அதே இந்திய அரசுதான் இத்தகைய ஜீவஹிம்சைக்கும் துணை போய்க் கொண்டிருக்கிறது.

காராகுல் ஆடுகள் பலியிடப்படுவதை எதிர்த்து, மிருகங்கள் நலனில் அக்கறையுள்ள ஐந்து நிறுவனங்கள் ராஜ்ய சபைக்கு மனு கொடுத்தன.

பிரச்னையை ஆராய்ந்த ராஜ்ய சபை காராகுல் ஆட்டுத் தோலுக்கு அந்நியச் செலாவணி மதிப்பு நிறைய இருப்பதால் இந்தப் பண்ணை தொடர்ந்து நடத்தப்படலாம் என்று கூறிவிட்டது.

ராஜ்யசபைக்கு மனு செய்த ஐந்து அமைப்புக்களுள் ஒன்று **Beauty without Cruelty.** இவ்வமைப்பு தயாரித்துள்ள திரைப்படம் ஒன்றில், பிகானீர் பண்ணையில் நடக்கும் கொடுமைகள் படமாக்கப்பட்டுள்ளன. இப்படத்தில் விழிகள் தெறிக்கத் தாய் ஆடுகள் மிரண்டு போய்ப் பார்க்கையிலேயே, குட்டிகள் உயிரோடு தோலுரிக்கப்படும் காட்சி, கல் நெஞ்சக்காரர்களையும் கலங்கச் செய்யும். அந்த டாகுமென்டரி திரைப்படத்தைப் பார்த்துவிட்டுக் கனத்த நெஞ்சத்துடன் மேற்படி நிறுவனத்தின் சென்னைக் கிளைத் தலைவர் சின்னி கிருஷ்ணாவைச் சந்தித்தோம்.

''பதினெட்டு வயது வரை அசைவ உணவை விரும்பிச் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன்'' என்று ஆரம்பித்து, சின்னி கிருஷ்ணா தமது அனுபவங்களைக் கூறினார்:

''ஒருமுறை மாமிசத்திற்காக மிருகங்கள் கொல்லப்படுவதைப் பார்த்தேன். அதற்குப் பிறகு மிருகங்களுக்கு, வலி தெரியாமல், நவீன முறையில் பெறப்படும் மாமிசத்தை மட்டுமே உண்ணலாம் என்று முடிவு செய்தேன். ஆனால் சில நாட்கள் சென்றதுமே அசைவ உணவு இல்லாமல் வாழ்வது அப்படியொன்றும் கஷ்டமானது இல்லை என்று புரிந்துவிட்டது.



'சூரத்' நகரைச் சேர்ந்த 'ஜயந்திலால் சொகன்வாலா' என்பவரைத் தெருவில் நடந்து கொண்டிருக்கும்போது ஒரு மாடு முட்டித் தள்ளிவிட்டது. மாநகராட்சியின் கவனக்குறைவால்தான் இப்படி மாடுகள் தெருவில் சுற்றுகின்றன என்றும் தமக்கு விபத்து ஏற்பட்டது என்றும் கூறி, பதினாயிரம் ரூபாய் நஷ்ட ஈடு கோரி வழக்குத் தொடுத்திருக்கிறார் ஜயந்திலால்!

ஆதாரம்: ஸண்டே

தகவல்: சம்பத்குமாரி

''சில வருடங்கள் சென்று அமெரிக்காவில் ஒரு சரணாலயத்துக்குச் சென்றேன். அங்கே நான் விருந்தாளியாகத் தங்கியிருந்த இடத்தில் எனக்குச் சைவ உணவு தயாரிக்கும்படி கேட்டுக் கொண்டேன். நான் அங்கிருந்து விடைபெற்றுக் கொண்டபோது எனக்குவிருந்தோம்பியபெண்மணி என்னைக் கேட்டார்: 'நீ சைவம் என்கிறாய். ஆனால் தோலால் செய்த ஷூக்களை அணிந்திருக்கிறாயே?'

'இந்தக் கேள்வி என்னைத் தீவிரமாகச் சிந்திக்க வைத்தது. அதற்குப் பிறகு தோல் பொருட்களை உபயோகிப்பதையே அடியோடு நிறுத்திவிட்டேன்.

''எனது தந்தை காப்டன் சுந்தரம் (நேருவின் பிரத்தியேக விமான ஓட்டுனராக இருந்தவர்) மிருகங்களின் நலனுக்காகவும் பாதுகாப்புக்காகவும் இயங்கி வரும் ப்ளூ கிராஸைத் தோற்றுவித்தவர். ப்ளூ க்ராஸில் ஈடுபட்டிருந்த எனக்கு **Beauty without Cruelty** என்ற இந்த அமைப்பிலும் ஈடுபாடு ஏற்பட்டது. 1959—இல் லேடி டவுடிங் என்பவர் இங்கிலாந்தில் துவக்கிய இந்நிறுவனத்துக்கு இப்போது உலகின் பல பகுதிகளிலும் முப்பத்தேழு கிளைகள் இருக்கின்றன. இந்தியக் கிளை 1974—இல் பூனாவில் ஆரம்பிக்கப்பட்டது. இதன் தலைவர் டயனா ரத்னாகர். டயனா ரத்னாகரும் இன்னும் சில தீவிர விலங்குப் பிரியர்களும் பால், தயிர் போன்றவற்றைக் கூட உண்பதில்லை.

''இந்திய **BWC**, செருப்புத் தயாரிப்பாளர்களை அணுகித் தோலுக்குப் பதிலாகச் செயற்கைச் சாதனங்களை உபயோகித்து, தரத்தில் எந்தவிதக் குறைவுமின்றிக் காலணிகளைத் தயாரிக்கலாம் என்று எடுத்துக் கூறி வருகிறது.

ஒரு சந்தர்ப்பத்தில், ராமநாதபுரம் மாவட்டத்தில் ஒரு கிராமத்தில் திருவிழாவையொட்டி நூற்றுக்கணக்கான ஆடு மாடுகள் பலியிடப்படப் போவதாக எங்களுக்குத் தகவல் கிடைத்தது. நாங்கள் உடனே போலீ

ஸுக்குத் தகவல் தெரிவித்ததால், அச்செயல் தடுக்கப்பட்டது. ஆனால் கிராமவாசிகளுக்கு எங்களிடம் ஒரே கோபம். அந்த வருடம் மழையே பெய்யாது, பஞ்சம் வரும் என்று அவர்கள் நம்பினார்கள். ஆனால் மற்ற எல்லா வருடங்களைக் காட்டிலும் அந்த வருடம் அதிக மழை பெய்தது. பயிர் செழித்தது!''

சின்னி கிருஷ்ணா உணர்ச்சி வசப்பட்டுப் பேசி முடித்தார்.

''மிருகங்களைக் காப்பாற்ற வேண்டும் என்று முழங்குவதும் இயக்கங்கள் ஆரம்பிப்பதும் சரிதான்; ஆனால் இதில் அக்கறை காட்டுபவர்கள் மனிதர்களுக்காக என்ன செய்கிறார்கள்?'' என்று கேட்டோம்.

''மனிதர்களிடம் அபிமானம் உள்ளவர்கள்தான் மிருகங்களை நேசிக்க முடியும். இங்கிலாந்தில் முதன்முதலில் விலங்குகள் பாதுகாப்புச் சட்டத்தைப் பாராளுமன்றத்திற்கு அறிமுகப்படுத்தியவர் **Richard Martin** என்பவர். புகைபோக்கித் துப்புரவாளர்களாக வேலை செய்த சிறுவர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளை எதிர்த்து முதன்முதலில் குரல் எழுப்பியவரும் இவர்தான். எங்கள் **BWC** நிர்வாக உறுப்பினர்கள் எல்லோருமே ஏதேனும் ஒருவகையில் மனித முன்னேற்ற அமைப்புக்களுடன் தொடர்புடையவர்கள்தான்'' என்றார் சின்னி கிருஷ்ணா

''இந்தக் காலத்தில் மனிதர்கள் ஒருவரையொருவர் மதிப்பது அரிதாகிவிட்டது. மதக் கலவரங்கள், வரதட்சணை கொலை, பெண் கருக்கலைப்பு போன்ற ஈனமான செயல்கள் மனித குலத்துக்கே தலைகுனிவு ஏற்படுத்திக் கொண்டிருக்கின்றன. இத்தகைய சமுதாயத்திற்கு நீங்கள் செய்யும் உபதேசங்கள் எடுபடுமா? உங்கள் போராட்டம் தோல்வியைத்தானே தழுவும்?' என்ற நமது அடுத்த சந்தேகத்தையும் தீர்த்து வைத்து நம்பிக்கையோடு பேசினார் சின்னி கிருஷ்ணா.

''உலகம் அவ்வளவு மோசமாகிக் கொண்டிருப்பதாக நான் நம்பவில்லை. எங்கள் முயற்சிகளுக்கு ஓரளவு பலன் கிடைத்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் சொல்வது போல் உலகத்தைப் பற்றி ஒரு மோசமான கணிப்புடன் செயல்பட்டால் எதையுமே சாதிக்க முடியாது.

''இறுதியாக ஒரு கேள்வி. 'மனிதன் மிருகங்களிடம் ஏன் அன்பு செலுத்த வேண்டும்?' என்று வாதாடுபவர்களுக்கு உங்கள் பதில் என்ன?''

''மனிதன் <u>மற்ற</u> மிருகங்களிடம் ஏன் அன்பு செலுத்த வேண்டும்' என்று அந்தக் கேள்வியைத் திருத்தி அமைத்துக் கொள்ளுங்கள். அப்போது உங்கள் கேள்வியிலேயே பதிலும் அடங்கியிருப்பதைக் காண்பீர்கள்!''

**— சீதா ரவி**

புகைப்படங்கள் நன்றி: **BWC**

# கல்கி கிருஷ்ணமூர்த்தி அறக்கட்டளை

## ஏழை மாணவர்களுக்கு உதவி ரூ 10,000

கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்களின் நினைவைப் போற்றும் விதமாக இந்த அறக் கட்டளை உருவாக்கப்பட்டிருக்கிறது. இதன் முக்கிய நோக்கங்கள்:

ஏழை மாணவர்களுக்கு உதவுதல்;
வறுமையில் வாடும் எழுத்தாளர்களுக்கு உதவுதல்;
நுண்கலைகளின் வளர்ச்சிக்கு உதவுதல்;
இலக்கிய, நுண்கலையின் ஆராய்ச்சிக்கு உதவுதல்;
ஊனமுற்றவர்களுக்கு உதவுதல்.

மேற்படி உதவிகள் ஜாதி மத பேதமின்றி அளிக்கப்படும்.

முதல் கட்டமாக இந்தக் கல்வி ஆண்டு 87—88க்கு ரூ 10,000 ஏழை மாணவர்களுக்கு உதவித் தொகையாக வழங்கப்பட விருக்கிறது.

ஐந்து கல்லூரி மாணவர்களுக்குத் தலா ரூ 1000 வீதம் அளிக்கப்படும்.

பத்து பள்ளி மாணவர்களுக்குத் தலா ரூ 500 வீதம் கொடுக்கப்படும்.

இவற்றுள் அமரர் கல்கி படித்த மூன்று பள்ளிக்கூடங்களின் மூன்று மாணவர்களுக்கு மூன்று உதவித் தொகைகள் ஒதுக்கப்படுகின்றன. அவையாவன ஈ.ஆர். உயர்நிலைப் பள்ளி, திருச்சி; தேசியக் கல்லூரி உயர்நிலைப்பள்ளி, திருச்சி; நகராட்சி மேல்நிலைப் பள்ளி, மயிலாடுதுறை.

இவைபோக, மீதமுள்ள உதவித் தொகைகளைப் பெற பின்வரும் ஆறு மாவட்டங்களில் உள்ள கல்வி நிலையங்களில் படிக்கும் மாணவர்களிடமிருந்து இந்த ஆண்டு விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன: சென்னை, செங்கல்பட்டு, சேலம், மதுரை, கோயமுத்தூர், நெல்லை—கட்டபொம்மன். அடுத்த ஆண்டு வேறு ஆறு மாவட்டங்களில் உள்ள கல்வி நிலையங்களில் படிக்கும் மாணவர்கள் இந்த வாய்ப்பினைப் பெறுவார்கள்.

உதவித் தொகைகளைப் பெற, மாணவர்கள் படிப்பில் சிறந்தவர்களாகவும் அதே சமயம் கல்வியைப் பெற்றோர் உதவியுடன் மட்டும் தொடர முடியாத நிலையில் பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களாகவும் இருக்க வேண்டும். இந்த இரண்டையும் உறுதிப் படுத்தக் கல்லூரி அல்லது பள்ளி முதல்வ



ரின் சான்றிதழுடன் விண்ணப்பிக்க வேண்டும். சென்ற கல்வி ஆண்டின் இறுதித்தேர்வில் பெற்ற மதிப்பெண்களின் நகலை முதல்வரின் கையொப்பத்துடன் இணைப்பது அவசியம்.

இவ்வாறு வருகின்ற விண்ணப்பங்களை ஆராய்ந்து இந்த உதவித் தொகைகளைப் பெறத் தகுதியுள்ள மாணவர்களை அறங்காவலர்கள் தேர்ந்தெடுப்பார்கள். அறங்காவலர்களின் முடிவே இறுதியானது.

விண்ணப்பங்கள் வந்து சேரக் கடைசி தேதி:

**ஜூலை 31, 1987**

கி. ராஜேந்திரன்
(ஆசிரியர், கல்கி)
நிர்வாக அறங்காவலர்

பி.கு.: கல்கி கிருஷ்ணமூர்த்தி ஞாபகார்த்த அறக்கட்டளைக்கு வசதியுள்ளவர்களிடமிருந்து நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன. நன்கொடைகளுக்கு வருமான வரி ஆணையரின் உத்தரவுப்படி வருமான வரி விலக்கு உண்டு. (C. No. 1146 – 111 – 208/86 Dated 12.3.87 upto 31.3. 1988.)

நன்கொடைகளை டிராஃப்ட் அல்லது எம்.ஓ. அல்லது செக் மூலம் KALKI KRISHNAMURTHY MEMORIAL TRUST என்ற பெயருக்கு அனுப்பலாம். விலாசம்: நெ.1, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை—600 034.

ராஜ்கமலின்...

# கடமை கண்ணியம் கட்டுப்பாடு

இம்மாத வெளியீடு!



சந்தானபாரதி
இளையராஜா
T.தாமோதரன் அனந்து
லெனின்-விஜயன் சுரேஷ்குமார் சூரி

# நீதிக்குத் தண்டனை



**கல்கி ஆசிரியர்:** "ஏறுங்க பெஞ்ச் மேலே. படம் வந்து எத்தனை நாளாகுது? இவ்வளவு லேட்டாவா விமரிசனம் எழுதறது?"

**ஜெயமன்மதன்:** (காதைப் பிடித்துக் கொண்டு) "சட்டசபைல தடைச் சட்டம்னு சொன்னாலும் சொன்னாங்க, படம் அமோகமா ஓடுது. கலைபத்தில டிக்கெட் கிடைக்கலே... அதான் லேட்டு."

**கேள்வி:** பின்வரும் செய்யுளுக்குத் தகுந்த மேற்கோள்களோடு விளக்கம் தருக: (இலக்கணப் பிழைகளை எழுதி நேரத்தை வீணடிக்க வேண்டாம்.)

உதவிகள் செய்வதாய் வாக்களித்து
உயிரையே உறிஞ்சிடும் கயவருக்கு
பதவியின் நிழலொரு பாதுகாப்பு
பணிந்திடும் அவரிடம் நீதிவாக்கு.

**பதில்:** நீதிக்குத் தண்டனை எனும் திரைப் படம் பார்த்தபின் ஜெயமன்மத மாமுனிவர் எழுதியதாகக் கருதப்படும் இச்செய்யுளை ஆராய்வோம்.

உதவிகள் செய்வதாய் வாக்களித்து, உயிரையே உறிஞ்சிடும் கயவருக்கு:

பஞ்சாயத்துத் தலைவருக்கு வேண்டாதவர் அடிபட்டால் அவர் காயங்களுக்கு மருந்திடுவது தவறு என்று தெரியாத டாக்டர். அவருடைய அன்பான மனைவி. அழகான குழந்தை — மூன்று பேரும் எப்படி அதிகார பலத்தில் கசக்கி நசுக்கப்படுகிறார்கள் என்பதையே இவ்விரண்டு வரிகளும் எடுத்துச் சொல்கின்றன.

டாக்டர் மீது கொலைப் பழி சுமத்தப்படுகிறது. அவர் மனைவிக்கு விபசாரி என்ற முத்திரை. காவலுக்கு நியமிக்கப்பட்ட போலீஸ் இன்ஸ்பெக்டர் அவளைக் கற்பழிக்க முயற்சி செய்து, இடையூறாக வரும் குழந்தையின் பிஞ்சுக் கழுத்தை நெறித்துக் கொன்று விடுகிறார். கண்ணீரும் கதறலுமாக நியாயம் கேட்டு அமைச்சர் வீட்டுக்குப் போனால் அங்கே... அமைச்சரின் காமம் படம் எடுக்கிறது. கற்பு பறிபோகிறது. (அம்மம்மா, குழந்தையின் உயிர் பறிக்கப்படும் போதும், தன் கற்பு சிதைக்கப்படும் போதும் ராதிகாவிடம் என்ன அற்புதமான உணர்ச்சிக் கொந்தளிப்புகள்!)

சமூகக் கொடுமைகளைத் தட்டிக் கேட்கும் ஒரு பெண் வக்கீல் மூலம் கோர்ட்டுக்கும் போய்ப் பார்த்து, அங்கும் பதவியும், செல்வாக்குமே வெற்றி காண்கின்றன. நீதி படுக்கையைத் தட்டிப் போட்டுக் கொள்கிறது.

பதவியின் நிழலொரு பாதுகாப்பு, பணிந்திடும் அவரிடம் நீதிவாக்கு:

ஏற்கெனவே சொன்னபடி பதவியின் பலத்தால் நீதியையும் அரசியல்வாதிகள் விலைக்கு வாங்கி விடுவதை, கொலை செய்தால் கூட அக்குற்றத்திலிருந்து நழுவி விடும் அக்கிரமத்தைப் படத்தின் பின்பகுதி விளக்குகிறது. அதையே செய்யுளின் இறுதி வரிகள் எடுத்துச் சொல்கின்றன.

**கதை மாந்தர்கள்:** ராதிகாவா, ஸ்ரீவித்யாவா — யாருக்கு முதலிடம்? அமைச்சராக வரும் சரண்ராஜ் நம் கவனத்தை அவர் பக்கமும் ஈர்த்துப் பிடிக்கிறாரே?

**கதை அமைப்பு:** அடுக்கடுக்கான சம்பவங்களில் விறுவிறுப்பை அள்ளித் தெளிக்கும் முன் பகுதி. சற்றே அபத்தமான, (ஒரு பெண்ணைக் கண்டு மயங்கி அமைச்சர் செய்யும் அட்டூழியங்கள்) வழக்கமான மசாலாத்தனமான பின்கதை.

**வசனம்:** பதவி, செல்வாக்கு, போலீஸை அரசியல்வாதிகள் சொந்த அடிமைகள் போல் நடத்துவது — போன்றவற்றின் 'உள்ளும் புறமும்' அறிந்த கலைஞர் கருணாநிதி பேனா நிப்பைத் தீட்டித் தீட்டிக் கூராக்கியிருக்கிறார்.

**இசை:** பாரதியாரின் சின்னஞ்சிறு கிளியே விற்கு இவ்வளவு புதுமையாக, இவ்வளவு இனிமையாக இன்னொரு மெட்டா என்று அதிசயிக்க வைக்கிறார் எம். எஸ். வி.

**கதை முடிவு:** ஆராய்ந்து பார்க்க வேண்டிய முடிவுதான். வன்முறை மட்டுமே பிரச்னைகளுக்குத் தீர்வு கொண்டு வரும் என்பது தவறான போதனை அல்லவா?

— **ஜெயமன்மதன்**


எல்லாருமே விடுதலைப் புலிகள் தான்!
யாழ் நகர் மீது
அப்பாவி ஈழத் தமிழர்


இந்தப் போலீஸிடமிருந்து என்னைக் காப்பாத்து!
மலியானா மக்கள்
மீரட் கலவரத்தை அடக்க வந்த ஆயுத போலீஸ்


ஜப்பான் தண்ணி வைரயா.. வைரயா..
கடல் நீரை குடி நீராக்கும் திட்டம் ரூ 220 கோடி
இந்த ஜப்பான்காரன் நம்ம பொளப்புல மண் அள்ளிப் போட வந்திருக்கான்!
தெலுங்கு கங்கை



# கல்கி

1987 ஜூன் 7
மலர் 45 இதழ் 45
பிரபவ வைகாசி 24



## காந்தியை மறந்தோம்; கற்காலத்துக்குத் திரும்புகிறோம்!

அடிக்கடி நடக்கும் இனக்கலவரங்கள் நமக்குப் பழகிவிட்டன. கன்னியாகுமரி விட்டால் ஹைதராபாத், அதை விட்டால் ஆமதாபாத், அங்கில்லை என்றால் கல்கத்தா, இல்லாவிடில் புதுதில்லி..., மீரட்... என்று மாறி மாறிச் செய்திகள் வர, மதப் பூசல்களுடன் வாழக் கற்றுக் கொண்டு விட்டோம். ஆனால் இதில் பெருமை இல்லை. நாம் நாகரிக முன்னேற்றம் அடைந்து வருகிறோம் என்பதற்கு இது அடையாளமில்லை. கற்காலத்துக்குத் திரும்பிக் கொர்ண்டிருக்கிறோம் என்பதே பொருள்.

இவை ஏன் நடக்கின்றன? முதலாவது, ஏராளமான மக்களை இன்னும் படிப்பறிவற்றவர்களாகவே வைத்திருக்கிறோம். பள்ளிகளில் போதிக்கப்படும் கல்வியும் தரமாக இல்லை. 'ஒன்றே கடவுள்; அவனை அடையும் மார்க்கங்களே வெவ்வேறு மதங்கள்' என்றும் 'எல்லா மதங்களும் அன்பு மார்க்கத்தையும் நன்னடத்தையையும் மனிதாபிமானத்தையும் தான் போதிக்கின்றன' என்றும் நாற்பது ஆண்டுகளில் மூன்று தலைமுறையினருக்கு நாம் கற்றுக் கொடுத்திருக்கலாம். தவறிவிட்டோம். அதன் பலனை அனுபவிக்கிறோம்.

இரண்டாவது, அரசியலும் அரசியல்வாதிகளும். இவர்களுக்கு ஜாதியும் மதமும் வோட்டுப் பிடிக்கும் சாதனங்களாகிவிட்டன. இந்த ஊரில் முஸ்லிம் வோட்டு, அந்தக் கிராமத்தில் அரிஜன் வோட்டு, இந்த வட்டாரத்தில் பிள்ளைமார் வோட்டு என்றுதான் சிந்திக்கிறார்கள், அதற்கேற்ப வேட்பாளரையும் நிறுத்துகிறார்களேயொழிய, தங்கள் கட்சியின் பொருளாதார, தார்மீகக் கொள்கைகளை விளக்கி, அவற்றின் அடிப்படையில் வோட்டுக் கேட்பவர்கள் யார் இருக்கிறார்கள்? இந்தத் தீமை படிப்படியாக வளர்ந்து, மதச்சார்புள்ள கட்சிகளே உருவாகிவிட்டன. பகிரங்கமாகவும் கூச்சமின்றியும் மதத்தின் பெயரைச் சொல்லி வோட்டுக் கேட்கும் அநாகரிகமும் ஆரம்பமாகிவிட்டது. இவையெல்லாம் எங்கு போய் முடியும்? யாரும் சிந்திக்கக் காணோம்.

மூன்றாவது, திறமையற்ற நிர்வாகம். ஒவ்வொரு தடவையும் ஒரு மதக் கலவரம் தோன்றும் போது அது சட்ட ஒழுங்குப் பிரச்னையாக மட்டுமே கருதப்படுகிறது. முதலில் போலீஸ், பிறகு ஆயுதப் போலீஸ், அப்புறம் ராணுவம் என்று அழைக்கப்படுகிறது. இவற்றுள் ஏதோ ஒன்று அதிக்கிரமங்களைச் செய்கிறது. நீதி விசாரணை நடக்கிறது. அத்துடன் முடிந்தது கதை. (இப்போது மலியானாவில் ஆயுத போலீஸ் நூற்றுக்கணக்கான அப்பாவி மக்களைக் கொன்று கங்கைக் கால்வாயில் உருட்டித் தள்ளிவிட்டதாகத் தெரிகிறது. விசாரணைக் கமிஷன் நியமிக்கப்பட்டிருக்கிறது.) சில காலம் சென்று அமைதி திரும்புகிறது. அமைச்சர்களும் நிர்வாகிகளும் சம்பவம் நடந்ததையே மறந்து போகிறார்கள் — அடுத்த கலவரம் மூளும் வரை! நிரந்தரப் பரிகாரம் பற்றி யாருமே யோசிப்பதில்லை.

நான்காவதாக, நமது அரசு, 'மதச்சார்பின்மை' என்ற சொற்றொடரை மதத்தைப் புறக்கணிக்கவே பயன்படுத்துகிறது. மாறாக, எம்மதமும் சம்மதம் என்று ஏற்று, எல்லா மதங்களுக்கும் சமமான உயர்வளித்து, மக்களை நல்வழிப்படுத்தும் மார்க்கமாக அவற்றை உபயோகித்துக் கொண்டால் பெரிய சாதனைகளை நிகழ்த்த முடியும். இதற்கு, மதத் தலைவர்களின் ஒத்துழைப்பை அரசு கோரிப் பெற முடியும்; பெற வேண்டும்.

இதைச் செய்யாமல் மதத் தலைவர்களை அரசு புறக்கணிக்கும்போது, அவர்கள் பிராபல்யத்தை இலகுவாக அடைவதற்கேனும் அரசியல் பேச ஆரம்பிக்கிறார்கள். அரசியலில் நேரடியாக ஈடுபடும் மதத் தலைவர்களும் உருவாகிறார்கள். இது, படிப்படியாக வளர்ந்து, வேண்டாத விபரீதங்களுக்கு வழி வகுக்கிறது. இது ஐந்தாவது காரணம்.

வாடிகேனில் போப்பாண்டவர், எம்மதமும் சம்மதம் என்பதை உணர்த்த, சர்வமத சமரச மாநாடு நடத்துகிறார். இந்தியா உள்படப் பல்வேறு நாடுகளிலிருந்து பல்வேறு மதத்தவர் அழைக்கப்படுகிறார்கள். நாற்பது ஆண்டு சுதந்திரச் சரித்திரத்தில் நமது அரசும் கணக்கற்ற அரசியல் மகாநாடுகளை நடத்திக் காட்டியிருக்கிறது. ஆனால் மதங்களிடையே ஒற்றுமையை வளர்க்க, மதத் தலைவர்களை அழைத்து, ஒரே ஒரு காந்திய மகாநாடாவது நடத்தியிருக்கிறதா? இல்லை. ஏன்?

இதற்கு விடை தெரிய, இந்தத் தலையங்கத்தை ஆரம்பத்திலிருந்து மறுபடியும் படிக்கவும்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

**மாதம் ஒரு மாவட்டம்**

**கல்கி ஏற்கும் சமுதாயப் பணி**

# இந்த மாதம் பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம்



'**வ**ளர்ச்சிப் பணிகளை விரைவுபடுத்துவதற்கு வசதியாகத்தான் புதிய மாவட்டங்கள் பிரிக்கப்படுகின்றன' என்று அரசு தரப்பில் சொல்லப்படுகிறது. நியாயம். ஆனால் மாவட்ட எல்லைகளைப் பிரிப்பதில் காட்டும் வேகத்தை, வளர்ச்சிப் பணிகளில் காட்டுகிறதா அரசு? 'இல்லை' என்ற பதிலைத்தான் ஏக்கத்துடன் சொல்ல வேண்டியிருக்கிறது. இதற்குப் பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டமும் விதிவிலக்கு அல்ல!

அதனால்தான், கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில், பதினாறாவது மாவட்டமாகப் பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறோம். எனவே, பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம் முழுவதிலுமுள்ள பிரச்னைகள் அல்லது அவரவர் ஊர்ப் பிரச்னைகள், இல்லையெனில் தனி மனிதர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகள் ஆகியவற்றோடு, அரசியல்வாதிகளுடைய — அமைச்சர்களுடைய — அதிகாரிகளுடைய மெத்தனப் போக்குகளையும் சமூக விரோத சக்திகளுடைய அட்டகாசங்களையும் சுருக்கமாக எழுதி, உங்கள் தெளிவான முழு முகவரியோடு கல்கி அலுவலகத்திற்கு அனுப்புங்கள். இவற்றோடு உங்கள் மாவட்டத்தில் நிகழ்ந்துள்ள சாதனைகளையும் மாவட்ட வளர்ச்சிக்கான ஆலோசனைகளையும் சேர்த்தே எழுதலாம்.

கல்கி அலுவலகத்திற்கு வரும் உங்கள் ஒவ்வொருவருடைய கடிதமும் கவனமாகப் பரிசீலிக்கப்பட்டு, அவற்றில் முக்கியமானவற்றைத் தேர்ந்தெடுத்து, ஜூலை மாத மத்தியில், நமது கல்கி பிரதிநிதிகள் பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம் முழுவதும் சுற்றுப் பயணம் செய்வார்கள்; உங்களைச் சந்தித்துப் பேசுவார்கள். அவர்கள் வரும் தேதி பற்றிய முழு விவரங்களும் பின்னர் தனித் தனிக் கடிதங்கள் மூலம் தெரிவிக்கப்படும்.

சுற்றுப் பயண முடிவில், கல்கி பிரதிநிதிகள் பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டக் கலெக்டரைச் சந்தித்துத் தாங்கள் சேகரித்த பிரச்னைகளுக்குரிய விஷயங்களைப் பற்றிப் பேசி — விவாதித்துப் பதில்களைப் பெறுவார்கள். அவையெல்லாம் ஆகஸ்ட் மாதக் கல்கி இதழ்களில் செய்திகளாகவும் பேட்டிக் கட்டுரைகளாகவும் புகைப்படங்களாகவும் பிரசுரமாகும்.

எல்லாப் பிரச்னைகளைப் பற்றிய செய்திகளையும் பிரசுரித்து விட முடியாது என்பது உண்மைதான். ஆயினும் நியாயமான பிரச்னைகள் அத்தனையும் மாவட்டக் கலெக்டரிடமும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடமும் எடுத்துச் சொல்லப்படுவதன் மூலம், அரசின் கவனத்தையும் அதிகாரிகளின் கவனத்தையும் திருப்ப முடியும். இவற்றோடு, வாழ்க்கையின் அன்றாட அவலங்களையும் சமூக விரோதிகளின் அக்கிரமங்களையும் மோசடிகளையும் வெளிச்சம் போட்டுக்காட்டுவதன் மூலம், நமது சகோதர மக்களிடத்திலும் ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தலாமல்லவா! உடனடியாக எழுதியனுப்புங்கள்.

**பசும்பொன் மாவட்டம் பற்றிய பிரச்னைகள், அநீதிகள் தவிர, சாதனைகளும் முன்னேற்றத்துக்கான ஆலோசனைகளும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 20.6.87**

**(உறையின் மேல் 'மாதம் ஒரு மாவட்டம் — பசும்பொன்' என்று குறிப்பிடுதல் அவசியம்.)**

**— ஆசிரியர்**

**பி.கு: தற்போது நமது நிருபர்கள் கன்னியாகுமரி, அண்ணா, தர்மபுரி மாவட்டங்களில் ரீ-விசிட் செய்து வருகிறார்கள். அவர்களது அனுபவங்கள், கட்டுரைகள் மற்றும் பேட்டிகள் உருவில் புகைப்படங்களோடு கல்கி ஜூன் 21, 28 இதழ்களில் இடம் பெறும்.**

• தப்பு என்று தெரிந்த பின், கோவிந்தச் சட்டிடை புள்ளைகளை புரிந்தார் அவர் — ஆம்! பழியை ஏன் மீது போடுவது என்று முடிவு செய்துவிட்டதால்!



# நல்ல வளர்ச்சி போர்ன்விடா பயிற்சி!

அன்னையர் அறிவர்: கேட்பரியின் போர்ன்விடா கோகோ, மால்ட், பால் மற்றும் அசல் சீனியின் ஊட்ட நலன்களைக் கொண்டது. போர்ன்விடா குழந்தைகள் மிக விரும்பும் அத் தனிச் சுவையை பாலின் குணத்துடன் அளிக்கிறது.

தினமும் போர்ன்விடா அளிக்கப்படும் குழந்தைகள் வேலையிலும் விளையாட்டிலும் கூர்மையோடிருக்கிறார்கள். அது, அவர்களுக்கு ஆரோக்கியத்தையும் சுறுசுறுப்பையும் அளிக்கிறது. அவர்களுடைய வளர்ச்சிக்கு எல்லா வகையிலும் நலன் அளிக்கிறது.

அதன் தனிச் சுவையுடன் இணைந்திட்ட இன்றைய வளர்ச்சி.

கேட்பரியின்
போர்ன்விடா



## 9

வீடுதிரும்பும்போதுமுரளிக்குள்சின்ன தாய் ஒரு கோபம் இருந்தது. அயிரை விட்டு, வரால் வாங்குபவர் என்கிற வாசகம் தோன் றிற்று. ஆனால் எது அயிரை, எது வரால் என்று புரிபடவில்லை. வேலை என்கிற அயிரை மீன் காட்டி மாப்பிள்ளை என்கிற வரால் மீனை இழுக்கிறாரா? அல்லது மாப்பிள்ளை என்று என்னைக் காட்டி வேலை என்கிறதை எடுத்தாரா?

முன்பெல்லாம் ஆண்களை, என் பெண் ணைத் திருமணம் செய்து கொள்ள வேண்டு மென்றால் ஏழு கடல் ஏழு மலை தாண்டியிருக் கிற இடத்திலிருந்து சந்திரகாந்தக்கல் கொண்டுவா என்று கட்டளை இடுவார்க ளாம். ஆணும் படாத பாடுபட்டுச் சந்திர காந்தக்கல் கொண்டு வந்து பெண்ணை மணந்து கொள்வானாம்.

பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்றால் போரிடு. வீரம் காட்டு. வீணை வாசி, கவிதை எழுது என்று ஏதாவது கட்டளைபோடுவார்கள். பெண்மனசு ஜெயிப் பது அரிது. திருமணம் தகுதியுள்ளவனுக்கு மட்டும்தான். இப்போது அப்படியில்லை.

பெண் மலிவாகி விட்டாள்.

பெண்ணைப் பெற்றவனே ஏழு கடல் ஏழு மலை தாண்டிப் போய்ச் சந்திரகாந்தக் கல் கொண்டு வந்து கொடுத்துப் பெண்ணை யும் தலையில் கட்டுகிறான்.

இந்த வேலை சந்திரகாந்தக்கல்தான். கிடைப்பதற்கரிய விஷயம்தான். இதன் பொருட்டுத் திருமணமா? இது நல்லதா?

ராஜாவின் வைரக்கிரீடத்தைப் பார்த்து ஆசைப்பட்டானும் ஓர் ஏழை. நானும் ராஜா மாதிரி மனுஷந்தானே? எனக்குக் கிரீடமில் லையே என்று ஒரு சந்நியாசியிடம் புலம்பினா னாம்.

கிரீடம்தானே? ராஜாவிடம் கேட்டு வாங்கித் தருகிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. தலையில் கிரீடம் தரிக்கின்ற பொழுதெல்லாம் மடியில் ஒரு குரங்குக் குட்டியை வைத்துக் கொள்ள வேண்டும் என்றாராம் சந்நியாசி. ஏழை யோசித்தான். சரியென்று தலையசைத் தான். கிரீடமும், குரங்கும் ஒரு சேரக் கிடைத் தன.

பளபளக்கிற கிரீடம் பார்க்கிற பொழுதெல் லாம் குரங்குக்குட்டி மடியிலிருந்து எகிறிக் கிரீடம் பறிக்குமாம். இரண்டு விநாடிகள் கூடக் கம்பீரமாய் இருக்க விடாதாம். கிரீடம் பறிக்கிற வேகத்தில் முகமெல்லாம் கீறி விட்டதுகுரங்கு. எரிச்சல்தாளாமல்குரங்கின் தலையில் கிரீடம் வைத்துவிட்டு ஒழிந்து போ என்று நகர்ந்து விட்டானும் ஏழை.

அரச பதவி கடினமானதென்று கதை சொன்னாலும், இது தனக்கும் பொருந்துமா என்ற பயம் வந்தது முரளிக்கு.

''அம்பி, இந்த வேலை சாதாரணமாக் கிடைக்கலேடா.'' மெல்ல சங்கரன் தான் பட்ட கஷ்டங்களை விவரித்த போது, சந்திர காந்தக்கல் சுலபம் என்று பட்டது.

''நாளைக்கு அந்த ஜி. எம். கேட்கலாம், 'என்ன, மாப்பிள்ளை வேலைக்குச் சேர்ந்திட் டாரா'ன்னு 'ஆமாம்'னு நான் பதில் சொன் னால்தான் மரியாதை.

"சரி இது நடக்கலேன்னு வெச்சுக்கோ, ஒண்ணும் இடிஞ்சு போயிட மாட்டேன். ஜி. எம். மைக் கண்டா ஓடி ஒளிய மாட்டேன். எம் பொண்ணுக்குப் பையனைப் புடிக்க லேன்னு பெரிய பொய்யா சொல்லிக்கலாம். சொல்லிட்டுத் தலையைக் குனிஞ்சுக்கலாம். சொல்லணுமாங்கிறதுதான் கேள்வி.

''போ, போய் வேலையை முதல்ல ஒத் துக்கோ. அப்புறம் பேசிக்கலாம்...'' என்று சங்கரன் அனுப்பி விட்டார்.

பாலகுமாரன்

வேலைக்குப் போய்ச் சேர வேண்டிய ஒரு வார இடைவெளியில் தூக்கம் சுத்தமாய்ப் போயிற்று. அம்மாவிடம் தயங்கித் தயங்கிச் சொன்ன போது, அதுக்கென்ன, பேஷாப் பண்ணிக்கோயேன், அவா வடதேசத்து வட மாள், நாம ப்ரஹசரணம். பண்ணிக்கலாம். தப்பில்லே'', என்றாள்.

முரளிக்குக் கல்யாணம் பற்றிய கனவு இல்லை. ஆனால் பயம் இருந்தது. கல்யாணமே கூடாது என்கிற கடுமை இல்லை. ஆனால் நல்ல பெண்ணைப் பார்த்து, பேசி, புரிந்து, திருமணம் செய்து கொள்ளும் எண்ணம் இருந்தது.

'சங்கரன் சார் ரொம்ப தேங்க்ஸ்! வேலை வேண்டாம்' என்று மனசுக்குள் சொல்லிப் பார்த்தான்.

வீட்டில் ஆண் துணையில்லாததை முரளி முதன் முதலாய் உணர்ந்தான். அப்பா இல்லை. கலந்து பேச, அண்ணன் தம்பி யாரும் இல்லை. குறைந்த பட்சம் தங்கை கூட இல்லை. இவனைப் போலவே வேலைக்கு அலை யும் நண்பர்களிடம் பேசலாம். உடனே அவர்கள் விழிகள் விரியும். வயிற்றுக்குள் அமிலம் சுரந்து பொங்குவது விடுகிற மூச் சில் தெரியும். ''மோட்டார்சைக்கிள் கம்பெனி

வேலை, பெண்ணோட வருதா? கை கொடு மச்சி. ஏம்பா அவரு பேர் என்ன சொன்னே, சங்கரனா...? அவருக்கு வேறே பொண்ணு இருக்குதா...?''

''எதுக்குடா?''

''நாம ஒரு அப்ளிகேஷன் போடலாம்னு தான்.''

நாக்கைத் தொங்கவிட்டுப் பசியில் அலை இறவனிடம். கொழுப்புச் சேராத சரிவிகித உணவு பற்றிப் பேச முடியுமா?

முரளி தனக்குத்தானே அதிகம் பேசிக் கொண்டான்.

''ஒரு கண்டிஷன் சங்கரன் சார், நான் பொண்ணைப் பார்த்து, சரின்னு பட்டாத் தான் கல்யாணம் பண்ணிப்பேன் சம்மதமா?''

—சொல்ல முடியுமா? சொல்வது நியாயம் தானா?

'வேலைக்கு முயற்சி பண்ணும்போதே இதைச் சொல்லலியே நீங்க. சொல்லியிருந்தால் வேண்டாம்னு போயிருப்பேனே...'

உண்மையாகவா...? நெஞ்சைத் தொட்டுச் சொல். மனசு கட்டளையிட்டது. நெஞ்சு தவித்தது.

'வேலைல ஜாய்ன் பண்ணிட்டேன். எனக்கு உங்க பொண்ணைப் பிடிக்கலை. இப்ப என்ன செய்யப் போறேள்?'

''ஆறு மாசம் ப்ரொபேஷன். அப்புறம் தான் வேலை நிரந்தரமாகும். ஒரு வார்த்தை கூடக் காரணம் காட்டாம வேலையிலேர்ந்து எடுக்கலாம். ஜி. எம். கிட்ட போய்ப் பையன் முரண்டு பண்றான்னு சொன்னாப் போறும். பறட்டுன்னு கிழிச்சிருவார்.''

'சார் நானே முன்னாடி நின்னு, உங்க பொண்ணுக்கு வேற இடமாப் பார்த்து...'

பகவானே முடியுமா என்னால்?

கண் மூடாமலேயே இருண்டு கொண்டு. இருண்டு கொண்டு வந்தது.

**நா**லு நாட்கள் உழப்பலுக்கப்புறம் இந்த வேலை வேண்டாம் என்று தீர்மானம் பண்ணினான். நீண்ட எதிர்காலம் கருதி இப்போது எடுக்கின்ற இந்த முடிவு சரியானது என்று திடம் கொண்டான்.

''சங்கரன் சார், ஐயாம் ஸாரி, எனக்கு எங்கேயாவது ஒரு சின்ன வேலை கிடைக்கும்.. அதில படிப்படியா முன்னுக்கு வந்து... வெல் ஐயாம்ஸாரி..'' என்று மனசுக்குள் பேசியபடி சங்கரனின் வீட்டை நெருங்கினான்.

உள்ளே போனதும் நப்பாசையில் நாக்கு ஒட்டிக் கொண்டது. சிரமப்பட்டுப் பிரிக்கையில் உலர்ந்தது.

''ஏம்ப்பா... ஏன்? ஒரு மாதிரியா இருக்கு உன் முகம். உடம்பு சரியில்லையா?''

''இல்லை சார், மனசு.''

''ஏன்?''

''பெரிய கண்டிஷனா போட்டுட்டேன்னு பயமா இருக்கு சார். என் தகுதிக்கு...''

''என்ன கண்டிஷன்?''

''உங்க பொண்ணை நான்... பார்த்தது கூட இல்லை... எப்படி நான்...?''

சங்கரன் முகம் சுருங்கினார். வெகுநேரம் உற்றுப் பார்த்தார்.

''அடப்பாவி... இதுக்கா இடிஞ்சு போயிட்டே? உன்னைப் புத்திசாலின்னு நினைச்சேன். இல்லை போலிருக்கே?''

''சார்...''

''புடிக்காதஒரு புள்ளைக்குஎம்பொண்ணை கல்யாணம் பண்ண எனக்குப் பைத்தியமா புடிச்சிருக்கு? இதுக்கா இருண்டு போச்சு உன் முகம்? அவள் எனக்கு ஒரே பெண். அவளைத் தலையில் கட்ற மாதிரி கொடுப்பேனா?

''அடடே... எம்பொண்ணு சப்பாணியா, தத்தாரியா, இல்லை பைத்தியமா இருக்கும்னு நினைச்சுக்கவலைப்பட்டியா? வியாதிவெக்கை இருக்குமோன்னு கவலைப்பட்டியா? அப்படி ஒரு பாவம் மனசறிஞ்சு நான் பண்ண மாட்டேன் அம்பி... உட்கார். உட்கார் முதல்லே.

''எம்பொண் அழகி. கெட்டிக்காரி. எம். ஏ. படிச்சிருக்கா. நீ சாயங்கால நேரமா வர்றயா... வீட்டில் இருக்க மாட்டா... என் கார் வந்ததும் எடுத்துக் கொண்டு க்ளாஸுக்குப் போயிடுவாள். அதுதான் பார்க்க முடியலை.

''நீ நல்லவன். குணவான். கெட்ட பழக்கம் எதுவும் இல்லாத பிள்ளை. பிக்கல் பிடுங்கல் இல்லாத குடும்பம்னுதான் கல்யாணப் பேச்சு எடுத்தேனே தவிர தாணிக்குத் தீனின்னு பேசலைப்பா நான். முருகா... எவ்வளவு தப்பா நினைச்சுட்டே என்னை..''

உள்ளே சின்னதாய் ஒரு நிம்மதி சுடர் விட்டது.

''என் சகோதரிகள் நாலு பேரும் ரொம்ப சிரமப்பட்டவா. சரியான மாப்பிள்ளையில்லாதபடி போச்சு. என் பொண்ணுக்கு நல்ல பையனாக் கிடைக்கணுமேன்னுதான்... கடவுளே... இப்படிக் கேவலமா நினைச்சுட்டியே என்னை...''

தலை கவிழ்ந்து உட்கார்ந்திருந்தார்.

''ஒண்ணு செய் அம்பி. சம்பிரதாயங்கள்ல எனக்கு நம்பிக்கையில்லேன்னாலும் உனக்கு இருக்கும். உங்கம்மாவுக்கு இருக்கும். வேலைல சேரு. பத்து நாட்கள் கழிச்சு அம்மாவோட பொண் பார்க்க வா. நான் வந்து கூப்பிடறேன். ஜாதகம் தேடி எடுத்துக் கொண்டு வரேன். உனக்குப் புடிச்சிருந்து, ஜாதகம் பொருந்தியிருந்தால் செய்துக்கோ. உங்கம்மா சம்மதம்னா தாலி கட்டு. இல்லேன்னா தவறேயில்லை. உனக்கு வேலை பண்ணி வச்ச புண்ணியம்...''

சுடர் பெரிசாகி, பெட்ரோமாக்ஸாகி, இருள் விலகி, முகம் ம ல ர் ந் து... கைகூப்பி, கைகூப்பலிலேயே மன்னிப்புத் தெரிவித்து, காலில் ஒருமுறை நெடுஞ்சாண்கிடையாய் விழுந்து, சங்கரன் மனம் குளிரப் பண்ணி மறுநாள் வேலையில் சேர்ந்தாயிற்று.

''கங்கிராட்ஸ்...'' ஜி. எம். கைபற்றினார். ''கங்கிராட்ஸ்'' மறுபடியும் கைகுலுக்கினார். முதல் குலுக்கலுக்குக் கர்வமும் இரண்டாம்

